உ

கணபதி துணை

கமலை ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகர்

இயற்றிய

# அநுட்டான அகவல்



அச்சுவேலி

சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக் குருக்கள்

எழுதிய

## உரையுடன்



திருமயிலை

சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளை

பதிப்பித்தது

விலை ரூ. 0-1-6 (சதம் 10)

உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

# அநுட்டான அகவல்



[சிவத்தியானம்]

சீர்பெறு மநாதி சிவாகமப் படியே
நேர்பெற நித்திய நியமம் புரிவோர்
கதிரவ னெழுமுன் கடிகையைந் தென்ன
மதிபெற வெழுந்து மகேசனை நினைந்து
துகளறு சரீர சுத்தி புரிந்தபின்

[தந்ததாவனம்]

தகைமைசேர் தந்த தாவனஞ் செய்து

[ஸ்நானம்]

போந்துநன் நதிமுதற் புனல்களி லாடித்
தோய்ந்துமுன் காய்ந்த துகிலினை யுடுத்து

[அஸ்திரசந்தி]

மனமுற வத்திர மந்திரத் துச்சியிற்
புனலொடு முக்காற் புரோக்கித் ததனுற்
றர்ப்பண மும்முறை தருசெப மீரைந்
துற்ற வருக்கிய மொருக்கா லுதவி

[ஆசமனம்]

மூவகைத் தத்துவ முறைகளின் முக்கா
லாவது புரிந்திட் டாசமனத் தையும்
கரு. அதரஞ் சுத்திசெய் தத்திர மதனல்
இதயங் கொடுதொடு மிடங்களுந் தொட்டே
யத்திர மதனு லங்கைக டுடைத்தே

[விபூதிசுத்தி]

வைத்தவெண் ணீற்றின் மந்திரம் பதினேன்
றத்தந் தன்னி லபிமந் திரித்தபின்

[மலஸ்நானம்]

உ0. பெருவிர லணிவிரற் பிடித்தவெண் ணீற்றாற்
சிரமுதற் பரிசனஞ் செய்தத் திரத்தா

[பஸ்மஸ்நானம்]

லாசா ரத்தினே டைந்திடஞ் சிரமுத
லீசா னுதிகொண் டிட்டுநீ றடைவினி
லத்தகு மற்றை யங்க மெங்கணுஞ்
உரு. சத்தியோ சாதந் தன்னினீ றணிந்தபின்

[மந்திரஸ்நானம்]

கரமிசை நீற்றைக் கழுவியப் புனலின்
முரணிலீ சான முதலேந் தமைத்தே
சென்னியிற் றெளித்துச் சிவமந் திரத்தாற்

[ஆசமனம்]

சொன்னவா சமனந் தொடுமிடம் புரிந்தே

[மானதஸ்நானம்]

௩0. நலங்கிளர் சுழுமுனே நாடியிற் றுளேயிற்
றுலங்குமெய்ச் சத்தி சொரிதரு மமுதா

லேயதுதன் னாக மெங்கணு முறவே
செய்தபி டேகந் திகழ்ந்தன னினைந்தே
மகிழ்ந்திடச் செய்து மானத கானம்

[சகளீகரணம்—கரநியாசம்]

நிகழ்ந்திட வேகர நியாசஞ் செயும்படி
யத்திர மதனா லங்கைக டுடைத்துச்
சத்திமந் திரத்தாற் றகைபெறக் கூட்டித்
திருவுறு சிவாதனஞ் சிவமூர்த் தியினாற்
பெருவிர லிரண்டையும் பிணிக்கவுள் வைத்து
முந்துமீ சான முதலைந் தினையு
மைந்திடம் பெருவிர லாதியா வமைத்தே
யங்கையில் வளைத்த வங்குட் டங்கொடு
திகழ்ந்திடு வித்தியா தேக நிசித்தே
வகைதெரி நேத்திர மந்திர மதனால்
அகமுற நடுவிர லாறையும் வளைத்தே
யுறுபெரு விரலா னுள்ளங் கைகளின்
மறுவறு மூல மந்திர நிசித்துச்
சிறுவிரன் முதலாச் செறிந்தநால் விரலினு
முறைதரு மிதய முதனியா சம்பணி
அத்திரமதனா லங்குட் டங்களின்
மெத்திய தர்ச்சனி விரல்களாற் றெறித்துக்
கவசமந் திரத்தாற் கைகளைச் சுற்றி
யவமின் மூலத்தா லமைந்திடக் கூட்டி
யிருங்கர நியாச மியற்றிய பின்னர்

[ஷ அங்கநியாசம்]

நெருங்கிய வங்க நியாசஞ் செயும்படி
செறிதரு சிவாசனஞ் சிவமூர்த் தியினா

னெறிதர மார்பி னியாசஞ் செய்தே
முந்திய சிரமுதன் முழந்தா ளளவா
யைந்திலீ சான மாதியைந் தமைத்தபின்
றிருத்தகு வித்தியா தேகநேத் திரமிவை
கருத்துறு மார்பினுங் கண்ணினு மமைத்தே
அறிந்திடு மூலத் தணிவிரல் பெருவிரல்
செறிந்திட மார்பினிற் செய்து நியாச
மான்றிடு மிதய மாதிமந் திரங்கண்
மூன்றுமத் தலங்கண் மூன்றினுங் கொடுத்துத்
தவற்று புயங்களிற் றர்ச்சனி களினுற்
கவசமந் திரங்கொடு கவசமு மமைத்தே
ஒங்கணி விரலினை யுள்ளங் கைகளி
லாங்குற வத்திர மதுகொடு நிசித்துத்
தக்ககைத் தலங்கொடு தாளத் திரயமுந்
திக்குப்பந் தனமுஞ் செய்தத் திரத்தால்
ஆய்ந்திடு கவசத்த வகுண் டனமும்
வாய்ந்த மூலத்தான் மகாமுத் திரையுஞ்
சங்கரன் றனது தனுவெனப் புரிந்திடு
மங்க நியாசமிவ் வடைவினிற் செய்தபின்

[பிராணயாமம்]

பொங்கிய மார்ச்சனம் புரிந்திடு மாறு
பங்கமி லிரேசக பூரகம் பழுதறு
கும்பக மிவைக்குக் கூறுமாத் திரைக
ணம்புமெட் டிரெட் டெண்ணன் கொடுநவில்
வாட்டமில் பதினொரு மந்திர மதனு
லீட்டிய பிராண யாம மியற்றி

[சிவதீர்த்தகரணம்]

யாங்குறு விந்துவி னமுதி தயத்தால்
வாங்கியே புனலில் வைத்து மூலத்தாற்
சிறந்தவத் திரத்தாற் றிக்குப்பந் தனமு
மறைந்திடு கவசத் தவகுண் டனமுஞ்
சித்திர மான தேனுமுத் திரைமகா
முத்திரை மூலத் தானு முடித்துப்

[சந்தியாத்தியானம்—பிராமி]

பரிவுறு மன்னப் பதுமவா சனமும்
புரிநூல் வேணியும் பொற்பட் டாடையும்
பொங்கெழின் மாதுளம் பூநிற மேனியுஞ்
செங்கதி ரெனவே திகழ்மணிப் பூணும்
முண்டக மனைய முகமொரு நான்கும்
விண்டல ருற்பல விழியிரு நான்குஞ்
சிருக்கொடக் கமாலை தெக்கிணம் வாமக்
கரத்தினிற் றண்டு கமண்டல நாற்றோள்
அழகுறு வாலை யாம்பிரா மணியை
யெழுந்து தயமு னெண்ணியா தரித்தே

[ஷ—வைணவி]

மிக்கபா னிறமும் வெண்பட் டாடையும்
மைக்கணே ரிரண்டும் வனமா லிகையும்
பரித்திடுங் கருடப் பதுமா சனமுந்
தரிக்குமுந் நூலுந் தயங்குயௌ வனமுஞ்
சங்குட னாழி தரித்திடம் வலத்தில்
வெங்கதை யபயமு மேவுநா ராயணி
யற்புத வடிவினை யன்புடன் வணங்கிப்
பொற்புற வுச்சியம் பொழுதுபா வித்தே

[௩—இரேசகத்திச்]

நிலைற் பலமென நிகழ்திரு மேனியு
மேனுகாற் கரமு மிணையின்முக் கண்ணுர்
தேசுறு கவமணித் திகழ்கிடைப் பதும
வாச னமுஞ்சற் றகன்றமென வனமும்
செய்த்திடு வேணியில் வைத்திடு பிறையும்
அத்திரி சூல மக்கமா லிகைவல
மிடத்தினி லபயமு மிணையில் செவ் வேறும்
படைத்திடு முருத்திரி பயிற்று வடிவைப்
பரிதிமேற் கடலிடைப் படிந்திடுஞ் சாயைக்
கருதிமெய் வணங்கிக் கைகுவித் திப்படிப்
பிரமனை முதலாப் பிறக்குமு வர்க்கும்
வரமருள் சத்திகள் வடிவினை நினைந்தே

[மந்திராபிஷேகம்]

வரமிகு பதினொரு மந்திரத் தப்புனல்
சிரமிசை கும்பமுத் திரையாற் றெளித்தே

[மார்ச்சனம்].

யாசற மீளவு மப்பதி னொன்றுன்
மாசறு புனலை வலக்கையின் வாங்கி
அகமுற விடக்கரத் தமைத்துவிழ் புனலைப்
புகல்பதி னொன்றினாற் புரோக்கித் ததற்பின்

[அகமர்ஷணம்]

நின்றவப் புனல்வல நேர்பெற வாங்கி
நன்றிகொ ளறமென நாசி யிடத்தாற்
றுன்னியுள் புகுந்து துரந்திடத் தன்பால்
மன்னிய வல்வினை மைக்குழம் பெனவே

நாடிய வல நாசி யாற்புறத்
தோடிவீழ்ந் தெனநினைந் துற்றவப் புனலைத்
திண்ணிய வச்சிரச் சிலையுரு வாக
வெண்ணிய வலப்புறத் தெரியிடத் துய்த்தே

[ஆசமனம்—சகளீகரணம்]

கருதுமா சமனங் கரநியா சத்தொடு
நிரைதரு மங்க நியாசமுஞ் செய்தே

[கவசவேஷ்டனம்]

மன்னிய கவச மந்திர மதனாற்
றன்னை மெய்ப் புனலாற் றகைபெறச் சூழ்ந்து

[சதாசிவத்தியானம்]

சூரிய னிடத்துச் சுத்தனை நினைந்து

[தருப்பணம்]

சீரிய காயத் திரியுடன் மூலங்
தர்ப்பண மும்முறை தனித்தனி செய்தே
அற்புதச் செபமீ ரைந்துசெய் தடைவினி
லதிகமொவ் வொருக்கா லருக்கியங் கொடுத்தே
பதினொரு மந்திரம் பகர்ந்து தர்ப்பித்துக்
கணபதி கந்தன் கௌரிமந் திரங்களிற்
றணவா தொருமுறை தர்ப்பணம் புரிந்து
சூரிய மந்திரம் துகளற முக்கால்
வாரியிற் றர்ப்பணம் வகைபெற வுதவி
மந்திரந் தேவர்கள் வகைபெறு மிருடிகள்
அந்தமின் மனுடர்க ளடைவுறு பூதந்
தந்தைதாய் ஞாதி தன்குரு விவர்க்கு
முந்திய தர்ப்பண முறைபெறச் செய்தே

வேண்டிய மந்திரம் வேறுஞ் சிலபல
பூண்டிடு தர்ப்பணம் புரிந்து விதிப்படி

[ஆசமன சகளீகரணம்]

தங்கு மாசமனந் தகுங்கர நியாச
மங்க நியாச மடைவினிற் செய்தபின்

[தீர்த்தோபசங்காரம்]

மருவிய புனலில் வைத்திடு மமுதைப்
புருவ நடுவிற் பொருந்திடக் கூட்டி

[செப நிவேதனம்]

மூல மந்திர முறைபெறச் செபித்தே
சூல பாணியனைத் தொழுதடி வணங்கி

[ஆக்கியோன் பெயர் முதனூல் பயன்]

நற்புகழ்க் கமலை ஞானப் பிரகாசன்
அற்புத மாகிய வாகமப் படியே
நயமன முடனே நவிலக வற்படி
நியமம் புரிவோர் நீடுவாழ் பவரே.

---

# அநுட்டான அகவல் உரை

[சிவத்தியானம்]

க—ரு. சீர்பெறு...புரிந்தபின்.

சிவாகம விதிப்படி நித்திய கருமஞ் செய்பவர்கள் சூரிய னுதிக்க ஐந்து நாழிகைக்குமுன் நித்திரைவிட்டெழுந்து, இயன்ற சுத்திசெய்தபின் (விபூதி தரித்துச் சிவபெருமானைத் தியானித்துத் தோத்திரம் பண்ணுக).

[தந்ததாவனம்]

சு. தகைமை...செய்து

(அதன்பின்) தந்தசுத்தி செய்து, (முகங்கழுவி விபூதி தரித்துக்)கொள்க.

[ஸ்நானம்]

எ—அ. போந்து...யுடுத்து

நதிமுதலிய நீர்நிலைகளிலே ஸ்நானஞ்செய்து, ஈரந்துவட்டி விபூதியிட்டுத், தோய்த்துலர்ந்த வஸ்திரந்தரித்துக் கொள்க.

[பூமி சுத்தி]

பாத்திரத்தைச் சுத்திசெய்து, சுத்தசலம் பூரித்து, "அஸ்திராயபட்" என்று அநுட்டானம் செய்யுமிடத்தை ஜலத்துளியினாலே புரோக்ஷித்து, அதன்மேற் பாத்திரத்தை வைத்து, கிழக்கு முகமாகவேனும் வடக்கு முகமாகவேனும் இருந்து அநுட்டானம் பண்ணுக.

[கணபதி வந்தனம்]

"கணபதயே நம:" என்று சிரசில் மும்முறைகுட்டிக் கணபதியைத் தியானிக்க.

[குருவணக்கம்]

"குருப்யோ நம:" என்று நமஸ்கார முத்திரையினால் குருவைத் தியானித்துக் கும்பிடுக.

[சலசுத்தி]

சலத்திலே நிரீக்ஷணம், புரோக்ஷணம், தாடனம், அப்பியுக்ஷணம், தாளத்திரயம், திக்குப்பந்தனம், அவகுண்டனம், தேனுமுத்திரை என்னும் எட்டுச் சுத்திகளுஞ் செய்க.

நிரீக்ஷணமாவது பெருவிரல் அணி விரலை வளைத்துப் பிடித்து மற்றை விரல்களை நீட்டுவதாகிய திவ்விய முத்திரை கொண்டு, மூலமந்திரம் உச்சரித்து அந்த நீரைப் பார்த்தல்.

புரோக்ஷணமாவது அஸ்திர மந்திரமுச்சரித்து, நிமிர்த்திய பதாகை முத்திரையினால் புருவநடுவில் இருக்கும் அமிர்தத்தை அந்நீரில் தெளித்தல்.

தாடனமாவது, சுட்டுவிரல் நீட்டிய கையினால் அஸ்திர மந்திர முச்சரித்து அந்நீரில் தட்டுதல்.

அப்பியுக்ஷணமாவது கவசமந்திர முச்சரித்து, கவிழ்த்த பதாகை முத்திரையினால் மூடுதல்.

தாளத்திரயமாவது அஸ்திர மந்திர முச்சரித்து, வலக்கையின் நடுவிரல் மூன்றினாலும் இடவுள்ளங்கையில் மும்முறை தட்டுதல்.

திக்குப்பந்தனமாவது அஸ்திர மந்திர முச்சரித்து, சுட்டு விரலால் பெருவிரல் மத்தியில் விரல்துடிக்க எட்டுத்திக்கிலும் தெறித்தல்.

அவகுண்டனமாவது கவசமந்திர முச்சரித்து, சுட்டுவிரல் நீட்டியகையினால் அந்நீரை மூன்று முறை வளைத்தல்.

[அஸ்திரசந்தி]

௬—௧௨. மனமுற...உதவி.

அஸ்திரமந்திர முச்சரித்து, சிரசில் மும்முறை நீரினால் புரோக்ஷித்து, "அஸ்திராயசுவாஹா" என்று சூரியமண்டலத்தி

விருக்கும் சிவபெருமானைத் தியானித்து மும்முறை தருப்பணஞ்செய்து, "அஸ்திராய நம:" என்று பத்துருச் செபித்து, மீண்டும் "அஸ்திராய சுவாஹா" என்று ஒரு முறை அருக்கியங் கொடுத்து, அவரை வழிபடுக.

[ஆசமனம்]

கரு—கஎ. மூவகை....துடைத்தே.

கோகர்ண முத்திரையையுடைய வலக்கைப் பெருவிரலடியிற்சார்ந்த உழுந்தமிழ்ந்து நீரை "ஆத்துமதத்துவாய சுவதா," "வித்தியாதத்துவாய சுவதா," "சிவதத்துவாய சுவதா" என்று மும்முறை உட்கொள்ளுக. "அஸ்திராயபட்" என்று உதடுகளைப் பெருவிரலடியினால் இடமாக இரண்டு தரமும், உள்ளங்கை கொண்டு கீழாக ஒரு தரமும்துடைத்துக் கைகழுவுக. இருதயமந்திர முச்சரித்து, பெருவிரலோடு கூடிய அணிவிரலால் முகம், வலமூக்கு, இடமூக்கு, வலக்கண், இடக்கண், வலக்காது, இடக்காது, கொப்பூழ், மார்பு, வலத்தோள், இடத்தோள், சிரசு என்னும் பன்னிரண்டிடங்களையுந்தொட்டு, அஸ்திரத்தாற் கைகளைச் சுத்தி செய்க.

[விபூதி சுத்தி]

கஅ—ககூ. வைத்தவெண்........பின்.

சிவமூலமந்திரஞ் சொல்லி, வலக்கைப் பெருவிரல் அணிவிரல்களால் விபூதியையெடுத்து, இடவுள்ளங்கையில் வைத்து, அஸ்திர மந்திரத்தினால் தண்ணீர் தெளிக்க. அந்த விபூதியில் அணிவிரல் பெருவிரல்களால் சிறிது எடுத்து, இராக்ஷதர்களால் உண்டாகும் இடையூறுகள் நீங்கும்பொருட்டு, தென்மேற்கு மூலையில் "அஸ்திராய ஹூம்பட்" என்று தெறித்துவிடுக. விபூதிக்கு நிரீக்ஷணம் முதலிய சுத்திகளைச் செய்க.

அகற்ப விபூதியானால் அதிலுள்ள மலத்தன்மை நீங்கும் பொருட்டு, வலக்கரத்தால் மூடிக்கொண்டு,

நிவிர்த்தி கலாயை நம :
பிரதிஷ்டா கலாயை நம :
வித்தியா கலாயை நம :
சாந்தி கலாயை நம :
சாந்தியதீத கலாயை நம :

என்று கலாமந்திரங்களையும்,

| | |
|---|---|
| ஈசாளுய நம :<br>தத்புருஷாய நம :<br>அகோராய நம :<br>வாமதேவாய நம :<br>சத்தியோசாதாய நம : | பஞ்சப்பிரமம் |
| இருதயாய நம :<br>சிரசே நம :<br>சிகாயை நம :<br>கவசாய நம :<br>நேத்திரேப்பியோ நம :<br>அஸ்திராய நம : | ஷடங்கம் |

என்னும் பதினெரு மந்திரங்களையும் அபிமந்திரிக்க. கற்ப விபூதியாயின் பதினெரு மந்திரங்களை மாத்திரம் அபிமந்திரிக்க.

[மலஸ்நானம்]

உ0—உக. பெருவிரல்......அத்திரத்தால்.

அஸ்திர மந்திர முச்சரித்து வலக்கைப் பெருவிரல் அணி விரல்களால் விபூதித் துளியை எடுத்து, சிரசுமுதல் பாதமீருகப் பூசுக.

[பஸ்மஸ்நானம்]

உஉ—உரு. ஆசாரத்திளுேடு.......பின்.

விபூதியில் இருதயமந்திரத்தினுல் சலம் விட்டு, கவசமந்திரத்தினுல் குழைத்து, நடுவிரல் மூன்றினுலும் "ஈசாளுய நம' என்று சிரசிலும், "தத்புருஷாய நம" என்று நெற்றியிலும், "அகோராய நம" என்று மார்பிலும், "வாமதேவாய நம" என்று உந்தியிலும், "சத்தியோசாதாய நம" என்று வலமுழந்தாள், இட

முழந்தாள், வலப்புயம், இடப்புயம், வலமுழங்கை, இடமுழங்கை, வலமணிக்கட்டு, இடமணிக்கட்டு, விலாப்புறங்கள். முதுகு, கழுத்து என்னுந் தானங்களிலும் திரிபுண்டரமாக அணிக.

திரிபுண்டர தாரணம் செய்த கைகள் சுத்தியாதற் பொருட்டு ஒவ்வொரு முறையும் அஸ்திரமந்திர முச்சரித்து, இருகைகளையுந் தீண்டித்தரிக்க.

[மந்திரஸ்நானம்]

உசு—உஅ. கரமிசை.......மந்திரத்தால்.

எஞ்சிய விபூதியோடு சலம் விட்டுக் கும்ப முத்திரையாகப் பிடித்து ஈசானமுதலிய பஞ்சப் பிரம மந்திரங்களை யுச்சரித்து, மூலமந்திரத்தினாலே சிரசில் அபிஷேகஞ் செய்து கைகழுவுக.

நிலத்திற்சிந்திய விபூதி இருதயத்தை யடைந்ததாகப் பாவிக்க.

[ஆசமனம்]

உகூ—சொன்ன.......புரிந்தே.

முன்போல ஆசமனம் தொடுமிடம் புரிக.

[மானதஸ்நானம்]

ங0—ஙச. நலங்கிளர்...நானம்.

மூலமந்திரத்தை நாதாந்தமாக வுச்சரித்து, சுழுமுனை நாடியின் துளையில் விளங்குகின்ற சத்தி சொரிகின்ற அமுதத்தினால் சரீரத்தின் உள்ளும் புறம்பும் அபிஷேகஞ் செய்ததாகப் பாவிக்க.

[சகளீகரணம்—கரநியாசம்]

ஙரு—ருச. நிகழ்ந்திட...பின்னர்.

"அஸ்திராயபட்" என்று வலக்கையினால் இடக்கையையும், இடக்கையினால் வலக்கையையும் உள்ளும் புறமுந் துடைத்து, "சத்தியைவௌஷட்" என்று இருகரங்களையுங்குவித்து, குவித்த

இருகைகளின் நடுவில் அங்குட்ட விரல்களினாலே சிவாசன மந்திர முச்சரித்து, சிவனுக்குரிய ஆசனத்தை அமைத்து, சிவ மூர்த்தி மந்திரத்தினால் சிவனுக்குரிய சரீரமாகிய மூர்த்தியை அதில் எழுந்தருளச் செய்து, ஈசானம் முதலிய பஞ்சப்பிரம மந்திரங்களையும், பெருவிரல் முதலான ஐந்து விரல்களிலும் அமைத்து, கைகளின் நடுவில் அங்குட்ட விரல்களினாலே வித்தியாதேகம் நியசித்து, நேத்திர மந்திரத்தினால் நடுவிரல் ஆறை யும் வளைத்து, பெருவிரலினாலே உள்ளங்கைகளில் சிவமூல மந்திரத்தை நியசித்து, சிறுவிரல் முதலிய நான்கு விரல்களில், பெருவிரல்களால் இருதயமுதலிய மந்திரங்களையும் பெருவிரல் களில் தர்ச்சனி விரல்களால் அஸ்திர மந்திரத்தையும் நியாசம் பண்ணி, கவசமந்திரத்தால் கைவிரல்களைச் சுற்றி, மூலமந்திரத் தால் இருகைகளையுங் கூட்டிப் பரமீகரணம் செய்க.

[சு—அங்கநியாசம்]

ருரு—எரு. நெருங்கிய....செய்தபின்.

பெருவிரல் அணிவிரல்களைச் சேர்த்து, மார்பிலே சிவா சனத்தையும் சிவமூர்த்தியையம் நியசித்து, பெருவிரல் முதலிய விரல்களினால் சிரம் முகம் மார்பு குய்யம் முழந்தாள் என்னும் அங்கங்களில் ஈசானாதியைந்தையும் நியசித்து, வித்தியாதேக மந்திர முசசரித்து, பெருவிரல் அணிவிரல்களினாலே இருதயத் திலும், நேத்திர மந்திர முச்சரித்து, வலக்கை நடுவிரல் மூன்றி னாலும் நேத்திரத்திலும் நியாசஞ் செய்து, அணிவிரல் பெரு விரல்கள் கொண்டு, சிவமூல மந்திரத்தினால் மார்பில் நியாசஞ் செய்து, இருதய சிர சிகாமந்திரங்களை இருதயம் சிரம் சிகை என்னும் இடங்களிற் பெருவிரலோடு கூடிய சிறுவிரல் அணி விரல் நடுவிரல்களாற் பதித்து, சுட்டுவிரல்களாலே கவசமந்திர முச்சரித்துக் கழுத்தை மூலை நடுவாகச் சுற்றி, பெருவிரலோடு கூடிய இடக்கை அணிவிரலால் வலஉள்ளங்கையிலும் பெரு விரலுடன் கூடிய வலக்கை அணிவிரலால் இடவுள்ளங்கையி லும் அஸ்திர மந்திர முச்சரித்து நியசித்து, அஸ்திர மந்திரத்தி

ளுல் தாளத்திரயமும் திக்குப்பந்தனமுஞ் செய்து, கவசத்தால் அவகுண்டனமும் மூலத்தால் மஹாமுத்திரையும் பண்ணி, தன்னைச் சிவ சொரூபமாக்கும் அங்கநியாசம் இப்படிச் செய்க.

[பிராணுயாமம்]

எசு—அக. பொங்கிய........இயற்றி.

மூக்கின் வலப்புறத்துள்ள பிங்கலை நாடியால் அகத்தில் உள்ள அசுத்த வாயுவைப் புறத்திற் கழித்தலாகிய இரேசகமும், இடப்புறத்துள்ள இடைநாடியினுலே புறத்தேயுள்ள சுத்தவாயுவை வாங்கி உள்ளே நிரப்புதலாகிய பூரகமுஞ் செய்து, பூரித்த அவ்வாயுவைச் சுழுமுனு நாடியிற் செலுத்தி இயன்றளவு கும்பகஞ் செய்தபின் பிங்கலை நாடியினுல் இரேசகஞ் செய்து சிவமூலமந்திர முச்சரித்து வலக்காதைத் தொடுக.

இரேசகத்துக்கு மாத்திரை எட்டு; பூரகத்துக்கு மாத்திரை பதினுறு; கும்பகத்துக்கு மாத்திரை முப்பத்திரண்டு. பூரக கும்பகரேசகங்களுக்கு சங்கிதாமந்திரங்களை மும்முறை உச்சரிக்க.

வலக்கையிற் சுட்டுவிரலையும் நடுவிரலையும் உள்ளே மடக்கி, பெருவிரலால் வலமூக்கைப் பிடித்துக்கொண்டு பூரகமும் பெருவிரல் அணிவிரல்களினுல் வலஇடமூக்குக்களைப் பிடித்துக் கொண்டு கும்பகமும் அணிவிரலினுல் இடமூக்கைப் பிடித்துக் கொண்டு இரேசகமுஞ் செய்க.

[சிவதீர்த்தகரணம்]

அஉ—அள. ஆங்குறு...முடித்து.

இருதயமந்திர முச்சரித்து, விந்துத்தானத்தி லிருக்கும் அமிர்தத்தை அங்குசமுத்திரையினுல் எடுத்துச் சலத்தில் வைத்து, மூலமந்திரத்தினுல் அபிமந்திரித்து, அதற்கு அஸ்திரத்தால் திக்குப்பந்தனமும், கவசத்தால் அவகுண்டனமும், மூலத்தால் தேனுமுத்திரையும் மகாமுத்திரையும் முடிக்க.

[சந்தியாத்தியானம்—பிராமி]

அஅ—சுஎ. பரிந்துறு...ஆதரித்தே

பிராமியை அன்னவாகனத்தில் பதுமாசனம் பொருந்த இருப்பவராய், உபவீதமும் சடையும் பீதாம்பரமும் மாதுளம்பூ நிறத்திருமேனியும், சிவந்த ஆபரணமும், நான்கு முகங்களும் எட்டுக்கண்களும் வலக்கை இரண்டினும் சிருக்கும் அக்ஷமாலை யும், இடக்கை இரண்டினும் தண்டும் கமண்டலமும் நாற்றோ ளும் இளம்பருவமு முடையவராய், உதய காலத்துக்குமுன் தியானிக்க.

[ஷ—வைணவி]

சுஅ—கዐரு. மிக்க...பாவித்தே.

வைணவி சத்தியைக் கருடவாகனத்தில் பதுமாசனம் பொருந்த இருப்பவராய், வெண்ணிறமும் வெண்பட்டாடையும் ஒரு முகமும் இரண்டு கண்களும் துளசிமாலையும் உபவீதமும் இடத்திருக்கரத்தில் சங்கும் சக்கரமும் வலத்திருக்கரத்தில் கதையும் அபயமும், யௌவன பருவமுமுடையவராய்ப் பாவித்து மத்தியானத்தில் தியானிக்க.

[ஷ—இரௌத்திரி]

கዐசு—ககஎ. நீலவுற்பல...நினைந்தே.

இரௌத்திரியை இடபவாகனத்தில் பதுமாசனம் பொருந்த இருப்பவராய், நீலோற்பலம் போலும் திருமேனி யும், நான்கு கரங்களும், மூன்று கண்களும், சடையிலே பிறை யும், வலக்கை யிரண்டிலும் சூலமும் அக்ஷமாலையும், இடக்கை யிரண்டிலும் அபயமும் வேலும் உடையவராய் யௌவனம் திரும்பிய பருவமுடையவராய்ப் பாவித்து சூரியாஸ்தமனத்தில் தியானிக்க.

பிராமீ, வைஷ்ணவீ, ரௌத்திரி என்னும் மூவரும் பிரமா, விட்டுணு, ருத்திரன் என்னும் மூவருக்கும் வரங்கொடுக்கும் சத்திகளாம்.

[மந்திராபிஷேகம்]

கக அ—ககக. வரமிகு...தெளித்தே.

(வலக்கையால் ஜலத்தை முகந்து இருதயமந்திர முச்சரித்து, இடக்கையில் விட்டு) கும்பமுத்திரையாகப் பிடித்துக் கொண்டு, ஈசான முதலிய பதினெரு மந்திரங்களால் அபிமந்திரித்து, மூலமந்திரத்தினுலே சிரசிலே புரோக்ஷிக்க.

[மார்ச்சனம்]

கஉ0—கஉங. ஆசற...பின்.

சலத்தை வலக்கையான்மூடி ஈசான முதலிய பதினெரு மந்திரங்களால் அபிமந்திரித்து, வலக்கையால் நீரை எடுத்து இடக்கையில் விட்டு வைத்துக்கொண்டு, அவ்விடக்கையினின்றும் கீழே ஒழுகுகின்ற சலத்தை வலக்கையினுலே "ஈசானுய வௌஷட்" என்பது முதலிய பதினெரு மந்திரங்களினுலே சிரசிற் புரோக்ஷிக்க.

[அகமர்ஷணம்]

கஉச—கஙக. நின்றவப்புனல்...உய்த்தே.

இடக்கையில் எஞ்சியிருந்த நீரை வலக்கையில் விட்டு, மூக்குக்குச் சமீபத்திலே பிடித்துக்கொண்டு, அது வெண்ணிறமுள்ள சுத்தமான தருமரூபமாய், இடமூக்கு வழியாய் உட்புகுந்ததாகப் பாவித்துக் கும்பகஞ் செய்து, அந்நீர் உள்ளிருக்கிற பாவத்தைக் கெடுத்ததாகத் தியானித்து, கெடுக்கப்பட்ட பாவமானது மைக்குழம்புபோல வலமூக்கின் வழியாகப் புறப்பட்டுக் கையில் வந்ததாகப்பாவித்து, வலக்காற் பெருவிரலில் சுவாலிக்கும் காலாக்கினியில் "அஸ்திராய ஹூம்பட்" என்று புருவநெரிப்புடனே விட்டு, அந்தப்பாவம் அதில் விழுந்து தகிக்கப்பட்டதாகப் பாவித்து, அஸ்திரத்தினுலே கைகழுவுக.

[ஆசமனம்]

கங௨—கஙங. கருது...செய்தே.

ஆசமனமும் சகளீகரணமும் செய்க.

[கவசவேஷ்டனம்]

கஙச—கஙரு. மன்னிய...சூழ்ந்து.

கவசமந்திர முச்சரித்து, வலக்கையில் அமிர்தமயமான சலங்கொண்டு, தன்னை வலமாகச் சுற்றுக.

[சதாசிவத்தியானம்]

கஙசு. சூரியனிடத்து...நினைந்து.

சூரியமண்டலத்து நடுவில் விளங்கும் சதாசிவமூர்த்தியைத் தியானஞ் செய்க.

கஙஎ—கருக. சீரிய...விதிப்படி.

காயத்திரியும் மூலமந்திரமுமுச்சரித்து, தனித்தனி மும்முறை தருப்பணஞ்செய்து, பத்துருச்செபித்து, ஒவ்வொரு முறை அருக்கியங்கொடுக்க. சங்கிதா மந்திரங்களாலும், கணபதி, கௌரி, கந்தருடைய மந்திரங்களாலும் ஒவ்வொரு முறை தருப்பணம் புரிக. சூரியமந்திரத்தினுல் மூன்றுமுறை தருப்பணம் செய்க. மந்திரங்களுக்கும் தேவர்களுக்கும் இருடிகளுக்கும் மனுஷர்களுக்கும் பூதங்களுக்கும் பிதிரர்களுக்கும் குருவுக்கும் அவ்வவர்க்குரிய மந்திரங்களை உச்சரித்துத் தருப்பணம் செய்க.

புஷ்பங்கொண்டு கைவிரல் நுனியால் விடப்படும் தேவதீர்த்தத்தினுல, "சர்வேப்யோ மந்திரேப்ய சுவாஹா", "சர்வேப்யோ தேவேப்ய சுவாஹா" என்று தருப்பணஞ் செய்க. தேவகணங்கள்—ஆதித்தியர், வசு, ருத்திரர், விஸ்வர், சாத்தியர், மருத்து, பிருகு, அங்கிரசு என்னும் எண்மர்.

தருப்பையைக் கையில் மடித்து வைத்துக்கொண்டு, விரல் களின் இறைச்சந்தியாற் கொடுக்கும் ஆரிட தீர்த்தத்தினல் "சர்வேப்யோ ரிஷிப்யோ நம", என்று தருப்பணஞ்செய்க. இருடிகள்—அத்திரி, வசிட்டர், புலத்தியர், கிரது, பாரத்து வாசர், விசுவாமித்திரர், பிரசேதசர், இருச்சகர், அகத்தியர், துருவாசர் எனப் பதினெருவர்.

அக்ஷதையைக் கையில் எடுத்துக்கொணடு கனிட்டை மூலத்தினற் கொடுக்கும் மானவ தீர்த்தத்தினல் "சர்வேப்யோ மனுஷ்யேப்யோ வஷட்" என்று தருப்பணஞ் செய்க. மனுட ராவார்—சனகர், சனந்தர், சனுதனர், சனற்குமாரர், கபிலர், பஞ்சசிகர், இருபவர் என்னும் எழுவர்.

அக்ஷதைகொண்டு, கரதலமூலத்தாற் கொடுக்கும் பூத தீர்த்தத்தினல் "சர்வேப்யோ பூதேப்பியோ வௌஷட்" என்று தருப்பணஞ் செய்க. பூதங்கள்—பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்பன.

தருப்பையை மடித்து எள்ளுடன் தர்ச்சனி அங்குட்டங் களின் நடுவழியாகக் கொடுக்கும் பிதிர் தீர்த்தத்தால் "சர் வேப்யோ பிதிர்ப்பியோ சுவதா," "சர்வேப்யோ மாத்ருப்யோ சுவதா," சர்வேப்யோ ஞாதிப்யோ சுவதா," "சர்வேப்யோ ஆசார்யேப்ய சுவதா" என்று தருப்பணஞ்செய்க. பிதிரர்—தேவ பிதிரர், விசேஷபிதிரர், பிரேதபிதிரர் என மூவகைப்படுவர். தேவபிதிரர்கள்—அவ்வியவாகனர், அனலர், சோமர், யமர், அர்யம்மினர், அக்கினிஷ்வாத்தர், பர்ஹிஷர், ஆச்சியபர், சோமர் என்னும் ஒன்பதின்மர். விசேஷ பிதிரர்கள்—ஈசர், சதாசிவர், சாந்தர் என மூவர். பிரேத பிதிரர்கள்:—பித்ரு பிதாமக பிர பிதாமக விருத்தப்பிரபிதாமகர், மாத்ரு மாதாமகி பிரமாதாமகி விருத்தப்பிரமாதாமகி, ஸர்வேப்ய பிதிரர்.

[ஆசமன சகளீகரணம்]

கரு௨—கருரு. தங்கு....பின்.

ஆசமனமும் அங்கநியாச கரநியாசமும் செய்க.

[தீர்த்தோபசங்காரம்]

கருச—கருரு. மருவிய...கூட்டி.

முன்விந்துத்தானத்தி லிருந்தெடுத்து, ஜலத்தில் வைத்த அமிர்தத்தை இருதயமந்திர முச்சரித்து, சங்கார முத்திரையினால் எடுத்து, விந்துத்தானத்தில் ஒடுக்குக.

[சூரியோபஸ்தானம்]

கைநிறையச் சலம் விட்டுப் பிடித்துக்கொண்டு, சங்கிதா மந்திரத்தை உச்சரித்து, சூரியமண்டலத்தின் மத்தியிலிருக்கும் சிவபெருமானிடத்தில் "சிவாய சுவாகா" என்று தருப்பணஞ் செய்து, "சிவசூர்யாய சுவாகா" என்று ஒருமுறை தருப்பணஞ் செய்து, ஆசமனஞ் செய்க.

[செபநிவேதனம்]

கருசு—கருஎ. மூலம்....வணங்கி.

சிவபெருமானைத் தியானித்து, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை நூற்றெட்டுருவாயினும், அதிற் பாதியாயினும், அதிற்பாதியாயினும், பத்துருவாயினும் இயன்றபடி செபிக்க. பின் தேவி மூலமந்திரம், கணபதி மூலமந்திரம், சுப்பிரமணிய மூலமந்திரம், பைரவ மூலமந்திரம், சிவசூரிய மூலமந்திரம் செபிக்க.

கிரியைக் குறைவால் உண்டாகிய குற்றம் நீங்கும் பொருட்டு அகோரமந்திரத்தை இருபத்தொரு உருச்செபித்துத் தோத்திரஞ்செய்க.

தனக்கு அநுக்கிரகித்த குருவைத் தோத்திரித்து வணங்குக.

எழுந்து இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னும் அட்டதிக்குப் பாலகர்களையும் வணங்குக.

"பார்வதீசமேத பரமேசுவராயநம:" என்று வடக்குநோக்கி மூன்றுமுறை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, எழுந்து ஆசமனஞ் செய்க.

அஸ்திரமந்திர முச்சரித்து அநுட்டானம் பண்ணிய இடத்தைச் சலத்தினுற் றெளித்து அதனைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக்கொண்டு அநுட்டான ஜலத்தைச் சுத்தமான இடத்தில் விடுக.

கரு௮—கசுக. நற்புகழ்....வாழ்பவரே.

திருவாரூர் ஞானப்பிரகாச தேசிகர் சைவாகமப் பிரகாரம் பாடிய அநுட்டான அகவலின்படி நியமத்தைச் செய்பவர்கள் சிவானந்தப் பெருவாழ்வை அடைவார்கள்.

திருச்சிற்றம்பலம்

☞ இவ்வனுட்டான அகவலில் விதிகளெல்லாம் நிரம்பப் பெற்றிருத்தலினுலே சமயமுதலிய தீக்ஷைபெற்றவர் தங்கள் தங்கள் அதிகாரத்துக்கேற்ப விதிமுறையை ஆசாரியர் மூலமாக அறிந்துக்கொள்ளக்கடவர்.



## உரையாசிரியரின் வேறு நூல்கள்

| | ரூ | அ. | பை |
|---|---|---|---|
| சிவபூசை விளக்கம் ... | 1 | 8 | 0 |
| பிராசாத தீபம் உரை ... | 0 | 6 | 9 |
| சிராத்த தீபிகை ... | 0 | 2 | 6 |
| விநாயக பரத்துவம் .... | 0 | 6 | 9 |
| சைவப் பிரகாசிகை | | | |
| முதற் புத்தகம் ... | 0 | 2 | 0 |
| இரண்டாம் புத்தகம் ... | 0 | 2 | 6 |
| மூன்றும் புத்தகம் ... | 0 | 3 | 9 |
| நான்காம் புத்தகம் ... | 0 | 5 | 0 |
| ஐந்தாம் புத்தகம் ... | 0 | 7 | 0 |

கிடைக்குமிடங்கள்:—

(1) ச. கு. வைத்தீசுவரக் குருக்கள்,
அச்சுவேலி, யாழ்ப்பாணம்.

(2) சே. வே. ஜம்புலிங்கம்பிள்ளை,
20, காரணேசுரர் கோயில் தெரு,
மயிலாப்பூர், சென்னை.

---

காசிவாசி பிரம்மஸ்ரீ செந்திநாதையர் அவர்கள்
இயற்றிய
கந்த புராண நவநீதம் ரூ. 1—0—0

தபால் ரிஜிஸ்டர் சார்ச் முதலியன அணா 4
இவற்றை முன்பணமாக அனுப்புக.

விலாசம்:—

சி. சிவசம்புநாதையர்,
ஏழாலை,
சுன்னாகம், யாழ்ப்பாணம்.